Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**எது முக்கியம்?**

உடை மாறுவது முக்கியமல்ல; உள்ளம் மாறுவதும், உயர்ந்த கருத்துக்கள் உள்ளத்தில் பதிவதும்தான் முக்கியம்.

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


**அறிவாளி**

அறிவாளிக்கு—இயற்கையை உணர்ந்தவனுக்குத் துன்பமே வராது.

-தந்தை பெரியார்



மலர்: 6 சென்னை 4-7-82 ஞாயிறு வெளியூர் 5-7-82 திங்கள் இதழ்: 254

### ஊழலை ஒப்புக்கொண்டபின் பதவியில் நீடிப்பதா?

# தி.மு.க. மந்திரியை டிஸ்மிஸ் செய்க

## புதுவைமாநில கழகம் கோரிக்கை

புதுச்சேரி, ஜூலை 4-கள்-சாராயக்கடை ஏலத்தில் நடந்த ஊழல்களை ஒப்புக்கொண்ட நிலையில் தி மு க மந்திரி பெருமாள்ராஜா தமது பதவியை ராஜினாமா செய்யவேண்டும். இல்லையேல் அமைச்சர் பதவியிலிருந்து அவரை கவர்னர் நீக்கவேண்டும் என்று பி. கே. லோகநாதன் கூறியுள்ளார்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் புதுவை மாநில செயலாளர் பி. கே. லோகநாதன் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

கடந்த ஜூன் மாதம் 16ந் தேதி புதுவையில் நடந்த கள் சாராயக் கடை ஏலத்தில் ஊழல் நடைபெறவில்லையென்றும், நேர்மையாகத்தான் நடந்தது என்றும், ஏலத் தொகை அதிகமாகத்தான் கேட்கப் பட்டதென்றும் எனவே மறு ஏலம் விடத்தேவையில்லையென்றும் புதுவை கூட்டணி அரசின் வருவாய்த்துறை அமைச்சர் பெருமாள் ராஜா முன்வர் கூறினார்.

### ஊழலை மறைக்க...

கள் சாராயக்கடை ஏலத்தில் ஊழலுக்குப் பக்கபலமாக இருந்த அமைச்சர்தான் சிலதினங்களுக்கு முன்னர் எல்லாமே நீதி நேர்மையாக நடந்தது என்று வாதம் செய்தார்.

ஆனால் இன்று அதே அமைச்சர் சாராயக் கடைகளுக்கு மறு ஏலம் நடத்த உத்தரவு போட்டிருக்கிறார்.

ஊழலை மறைப்பதற்கும் அமைச்சர் பதவியைக் காத்துக் கொள்வதற்காகவும் அவர் இந்த உத்தரவைப் போட்டிருக்கிறார்.

இந்த உத்தரவு இன்னொரு உண்மையை உலகுக்குப் பறை சாற்றி விட்டது.

சாராயக் கடைகள் ஏலத்தில் ஊழல் நடந்திருக்கிறது. நீதி நேர்மையாக ஏலம் விடப்படவில்லை என்பதனை இன்றைக்கு அமைச்சர் பெருமாள்ராஜாஒப்புக்கொண்டிருக்கிறார்.

### ராஜினாமா செய்க

எனவே அமைச்சர்பெருமாள் ராஜா இனியும் அமைச்சர் பதவியில் இருப்பது ஜனநாயகத்திற்கு விரோதமானதாகும்.

அவர் தொடர்ந்து பதவியில் நீடிப்பது தி.மு.க.—இந்திரா காங்கிரஸ் கூட்டணி அரசுக்கு நல்லதல்ல.

எனவே அமைச்சர் பெருமாள் ராஜா தமது அமைச்சர் பதவியை ராஜினாமாச் செய்யவேண்டும் இல்லையேல் ஜனநாயக மரபுகளைக் காக்க அவரை மாநில கவர்னர் அமைச்சர் பதவியிலிருந்து நீக்க வேண்டும்.

இவ்வாறு அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் புதுவைமாநில செயலாளர் பி. கே. லோகநாதன் ஒரு அறிக்கையில் கூறியிருக்கிறார்.

## ஜனதா ஆட்சிமீது பிரதமர் புகார்

லக்னோ, ஜூலை, 4—நாட்டின் முன்னேற்றம் தாமதமானதற்கும் தடைப்பட்டதற்கும் ஜனதா ஆட்சிதான் காரணமாகும் என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினார்.

நாட்டின் முன்னேற்றத்திற்கு ஜனதா ஆட்சி பல தடைகளையே ஏற்படுத்தியது. அதற்கான சான்றுகள் இன்றும் உள்ளன என்றும் அவர் கூறினார்.

இந்திரா காங்கிரஸ் தொண்டர்கள் கிராமங்களுக்குப் போகவேண்டும். நாட்டில் தற்போது நடைபெற்று வரும் வளர்ச்சிப் பணிகளை அவர்களுக்கு விளக்க வேண்டும் என்று நைநிடாலில் நடந்த காங்கிரஸ்ஊழியர்கள் கூட்டத்தில் பேசுகையில் பிரதமர் குறிப்பிட்டார்.



திருச்சியை அடுத்த பாப்பாகுறிச்சியில் சத்துணவுக் கண்காட்சியை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்து வைத்த போது எடுத்த படம்.



டெல்லியில் நடைபெற்ற செய்தித்துறை அமைச்சர்கள் மாநாட்டில் பங்கேற்ற அமைச்சர ஆர்.எம்.வீ. மத்திய அமைச்சர் வசந்த் சாத்தேயுடன் பேசிக்கொண்டிருக்கிறார், அருகிலிருப்பது டெல்லி சிறப்பு பிரதிநிதி மோகனரங்கம் எம். பி.

### கழக எம். எல். ஏ. சேடப்பட்டி முத்தையா முயற்சி வெற்றி

# நிலவள வங்கிபணியாளர் 2,000 பேருக்கு ஊதிய உயர்வு:ஒப்பந்தம்ஆனது

உடுமலைப்பேட்டை, ஜூலை 4- தமிழகத்திலுள்ள நிலவள வங்கி ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு அளிப்பதற்காக கழக எம்·எல்.ஏ சேடப்பட்டி முத்தையா மேற்கொண்ட முயற்சி பெரும் வெற்றி பெற்றுள்ளது. அவரது முயற்சியால் சுமார் 2 ஆயிரம் ஊழியர்களுக்கு ஊதியஉயர்வு அளிப்பதற்கான ஒப்பந்தம் கையெழுத்தானது.

தமிழக கூட்டுறவு பிரதம நிலவள வங்கி பணியாளர் சங்கத்தின் தலைவராக கழக எம்.எல்.ஏ. சேடப்பட்டி முத்தையா வங்கி ஊழியர்களின் ஊதிய உயர்வு மற்றும் பல்வேறு சலுகைகளுக்காக பெரும் முயற்சிகளை மேற்கொண்டார்.

தமிழகத்தில் 182 பிரதம நிலவள வங்கிகள் உள்ளன. இந்த வங்கிகளில் சுமார் 2 ஆயிரம் பேர் பணியாற்றுகிறார்கள். கடந்தஏப்ரல்மாதம்முதல் தேதியில் இருந்து இந்த பணியாளர்களின் சமபளம் ரூ. 100 முதல் 250 வரை உயர்த்தப்பட்டுள்ளது. இதற்கான ஒப்பந்தத்தில் தலைவர் சேடப்பட்டி முத்தையா எம்.எல்.ஏ., பொதுச் செயலாளர் கே. எஸ். ஜெயகுமார், துணைத்தலைவர் கே. எஸ். சபாபதி பொருளாளர் எஸ். சுப்பிரமணியன் ஆகியோர் கூடுதல் பதிவாளர் முன்னிலையில் கையொப்பம் இட்டனர்.

### முதல்வருக்கு நன்றி

கடந்த 10 ஆண்டுகளுக்கும் மேலாக எதிர்பார்த்திருந்த சம்பள உயர்வை தமிழக அரசு ஏற்றுக்கொண்டு சம்பளம் கிராக்கிப்படி, பயணப்படி வருங்கால வைப்பு நிதி ஆகியவற்றை 5 சத விகிதம் முதல் 40சத விகிதம்வரை கூடுதலாக வழங்கியுள்ளது.

இந்த புதிய ஊதிய விகிதம் வழங்கியதற்காக முதல்வர் புரட்சித் தலைவர் கூட்டுறவுத் துறை அமைச்சர் பொன்னையன், கூட்



டுறவுப்பதிவாளர் சங்கத் தலைவர் சேடப்பட்டி முத்தையா, அண்ணா தொழிற்சங்க பேரவைப் பொதுச் செயலாளர் வை.பெருமாள் ஆகியோருக்குசங்கத்தின் சார்பில் பொதுச்செயலாளர் கே. எஸ் ஜெயகுமார் ஒரு அறிக்கையில் நன்றி தெரிவித்துள்ளார்.

## கன்னா 6-ந் தேதி சென்னை வருகிறார்

சென்னை, ஜூலை 4- ஜனாதிபதி தேர்தலில் எதிர்க்கட்சிகளின் வேட்பாளராக போட்டியிடும் முன்னாள் நீதிபதி எச்.ஆர். கன்னா வருகிற செவ்வாயன்று மாலை திருவனந்தபுரத்திலிருந்து சென்னை வருகிறார்.

### ஒருமைப்பாட்டுக் குழுவிலிருந்து

## கருணாநிதியை தூக்கி எறிக

சேலம், ஜூலை 4—இந்தியாவில் இரண்டு கேரளங்கள் உள்ளன என்று கருணாநிதி கூறிய கருத்து தேசிய ஒருமைப்பாட்டை பாதிக்கும். எனவே கருணாநிதி தேசிய ஒருமைப்பாட்டுக் குழுவிலிருந்து ராஜினாமா செய்ய வேண்டும் என்று உள்ளாட்சித் துறை அமைச்சர்குழந்தைவேலு சேலத்தில் நிருபர்களிடையே பேசுகையில் கூறினார்.

இதுகுறித்து அவர் மேலும் கூறுகையில் தேசிய ஒருமைப்பாட்டுக் குழுவிலிருந்துராஜினாமா செய்ய கருணாநிதி மறுக்கும் பட்சத்தில் பிரதமர் இந்திரா காந்தி அவரை அக்குழுவிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்று தெரிவித்தார்.

### அமைச்சர் எஸ். டி. எஸ். பேச்சு

# எந்த அரசு வந்தாலும் இலவச உணவு திட்டத்தை நிறுத்தவே முடியாது

கோயமுத்தூர், ஜூலை 4- எந்த அரசு வந்தாலும் புரட்சித்தலைவர் கொண்டு வந்த இலவச உணவுத் திட்டத்தை நிறுத்தமுடியாது என்று அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

கோவை மாவட்டம் மடத்துக்குளம் ஊராட்சி ஒன்றியத்தில் இலவச உணவுத் திட்டத்தைத் துவக்கி வைத்து அமைச்சர் எஸ்.டி.எஸ், பேசியதாவது:-

எந்த அரசு வந்தாலும் திட்டங்களை போடுகிற போது அது நிறைவேறுவதற்கும் நிறைவேறாமல் போவதற்கும் மூன்று காரணங்கள் இருக்கிறது. முதலாவது காரணம் திட்டம் தீட்டுகிறபோதே அது நல்ல திட்டமா, பொது மக்களுக்கு பயன்படுமா என்பதை எண்ணி நல்ல திட்டங்களைக் கொண்டு வரவேண்டும், இல்லாவிட்டால் பயன் தராது.

இரண்டாவது காரணம் திட்டம் நல்லதாக இருந்தாலும், அதனை செயல்படுத்துகிற அதிகாரிகளுக்கு அத்திட்டத்தின் மீது நம்பிக்கை இருக்க வேண்டும், நம்பிக்கை இல்லாவிட்டால் அந்த திட்டம் எந்த நோக்கத்திற்காக போடப்பட்டதோ அது நிறைவேறாமல் போகும்.

மூன்றாவது காரணம், திட்டம் நன்றாக இருந்தாலும் அரசு அதிகாரிகள் ஒத்துழைத்தாலும், பொதுமக்களும் ஒத்துழைக்க வேண்டும். பொதுமக்களுக்கு இத்திட்டத்தில் நம்பிக்கை வேண்டும். இந்த மூன்றும் இருந்தால் தான் ஒரு திட்டம் நிறைவேறும். வெற்றியும் கிடைக்கும்.

### பலரும் பாராட்டும் நல்ல திட்டம்

இந்த சத்துணவுத் திட்டத்தில் நான் சொல்லியிருக்கிற மூன்று காரணங்களும் இருக்கிறது என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். இந்த திட்டம் நல்ல திட்டம் என்று எல்லா கட்சியைச் சேர்ந்த தலைவர்களும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். பொது மக்கள் எல்லோரும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

### வெற்றி நிச்சயம்

இத்திட்டம் வெற்றிகரமாக நடைபெறுமா என்பதில் பலருக்கு சந்தேகம். ஆனால் தமிழ்நாட்டில் இருக்கிற அதிகாரிகளுக்கு இத்திட்டத்தின் மீது நம்பிக்கை இருக்கிறது. இங்கே இருக்கிற அதிகாரிகள் எடுத்த காரியத்தை வெற்றிகரமாக முடிக்கிற ஆற்றல் பெற்றவர்கள்.

அவர்கள்மீது சந்தேகம் இல்லை. மற்ற மாநிலத்தில் உள்ளவர்கள் நம்முடைய அதிகாரிகளின் திறமையை ஆற்றலை பாராட்டுகிறார்கள். அந்த அளவுக்கு திறமை வாய்ந்த அதிகாரிகள் நம்மிடம் இருக்கிறபோது



இந்த திட்டத்தை செயலாக்குகிற போது நிச்சயமாக வெற்றி கிடைக்கும் என்பதில்சந்தேகமில்லை.

தமிழகத்தில் ஏழை எளிய குழந்தைகளுக்கு இனி இலவச உணவு தேவையில்லை. அவர்களுடைய பெற்றோர்கள் அவர்களுடைய குழந்தைகளை காப்பாற்றிக் கொள்வார்கள். அவர்கள் பொருளாதார ரீதியில் வளர்ந்து விட்டார்கள் என்ற காலம் வரவேண்டும். அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டால் தான் இந்த சத்துணவு திட்டம் நிறுத்தப்படும். அது வரை யார் எதிர்த்தாலும் எவ்வளவு செலவு ஆனாலும் இந்த திட்டத்தை நடத்தியே தீரும் இந்த அரசு என்பதால் இது ஒரு வரலாற்று நிகழ்ச்சி

(3-ம் பக்கம் பார்க்க)

## இத்தாலிய விமானத்தை கடத்தியவர் கைது

கொழும்பு, ஜூலை 4— இத்தாலிய விமானத்தைக் கடத்திய ஸ்ரீபாலா ஏகநாயகாவைக் கைது செய்யும்படி இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே உத்தரவிட்டார். அதன்படி நேற்று இலங்கை போலீசார் அவரைக் கைது செய்தனர்.

ஏகநாயகாவை நாடு கடத்துமாறு இத்தாலிய அரசு விடுத்த கோரிக்கை குறித்து தமது அரசு இன்னும் முடிவு எடுக்கவில்லை என்று இலங்கை வெளி விவகாரத்துறை அமைச்சர் சாகுல் அமீது கூறினார்.

நாடு கடத்தப்படஇருக்கும் செய்தியை பற்றி ஏகநாயகாவிடம் நிருபர்கள் கேட்டனர். "அந்தப் பிரச்சினை வரும்போது அதைஎப்படி சமாளிப்பது என்பது எனக்குத் தெரியும்" என்று ஏகநாயகா கூறினார்.

## சைக்கிள்கள் திருட்டு: ஆசாமி கைது

சென்னை, ஜூலை 4- சென்னைநகரில் அசோக்நகர் கோடம்பாக்கம், மாம்பலம் ஆகிய பகுதிகளில் பூட்டிய சைக்கிள்களை திருடியதாக வியாசர்பாடியைச் சேர்ந்த செந்தூர்பாண்டியன் (வயது 28) என்பவரை இன்ஸ்பெக்டர் முருகேசன் கைது செய்தார். அவர் கொடுத்த தகவலின் பேரில் 7 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 15 சைக்கிள்களைப்போலீசார் கைப்பற்றி மேலும் விசாரணை நடத்தி வருகின்றனர்.



அமைச்சர் ராகவானந்தம் குற்றச்சாட்டு

# 7 வருடம் முதல்வராக இருந்து குடிநீர் வசதிக்கு திட்டமிடாத கருணாநிதி

**சென்னை, ஜூலை 4- ஏழு வருட காலம் முதலமைச்சராக இருந்தும் சென்னை குடிநீர்ப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு உருப்படியாக எந்தத் திட்டமும் தீட்டாதவர் கருணாநிதி என்று அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.**

அமைச்சர் ராகவானந்தம் கோட்டையில் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

கடந்த ஜூன் மாதம் வரை சென்னை நகருக்கு 5கோடி காலன் தண்ணீர் வழங்கப்பட்டு வந்தது. இதுகடந்த முதல் தேதி முதல் 4 கோடியே 90 லட்சம் காலன்களாக குறைக்கப்பட்டிருக்கிறது. வாரத்துக்கு 10 லட்சம் காலன் வீதம் குறைக்கப்பட்டு ஜூலை இறுதியில் 4½ கோடி காலன் தண்ணீர் வழங்கப்படும். இந்த நிலை தொடர்ந்து நீடிக்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது. மழைபெய்யும்என்று எதிர்பார்க்கப்படுகிறது.

குடிநீர் வாரியம் 1978ல் தான் அமைக்கப்பட்டது. சென்னை நகர மக்கள் ஏற்கனவே 2 தடவை வறட்சி நிலைமையை அனுபவித்திருக்கிறார்கள். வாரியம்அமைக்கப்பட்டது முதல்இதுவரைகூடுதலாக 50 லட்சம் காலன் தண்ணீர் குழாய் கிணறுகள் மூலம் அதிகப்படியாக சப்ளை செய்து வருகிறோம்.

### கடந்த ஆண்டை விட அதிக தண்ணீர்

அந்தத் தண்ணீர் தாமரைப்பாக்கத்திலிருந்து ராபின்சன் பார்க்கில் உள்ள பெரியதொட்டிக்கு கொண்டு வரப்பட்டு வழங்கப்படுகிறது. அதே போல திருவான்மியூர் முட்டுக்காடு இடையில் உள்ள பகுதிகளில் 4—5 குழாய் கிணறுகள் தோண்டி தண்ணீர் சப்ளை செய்து வருகிறோம்.

1974-ல் இதே நேரத்தில் 3 கோடியே 50 லட்சம் காலன் தண்ணீர்தான் விடப்பட்டது. அந்த ஆண்டு செப்டம்பரில் 2½ கோடி காலன்தான் விடப்பட்டது. 1975 ஜனவரி மாதத்தில் 3 கோடி காலன்தான்விடப்பட்டது. இந்த அளவு பிப்ரவரி மாதம் இரண்டரை கோடியாக குறைக்கப்பட்டது. பின்னர் ஒரு நாள் விட்டு ஒருநாள் தண்ணீர் விடும் நிலைமை இருந்தது.

இப்படி மோசமான வறட்சி நிலையை சென்னை மக்கள் ஏற்கெனவே அனுபவித்திருக்கிறார்கள். ஆனால் அப்படிப்பட்ட வறட்சி நிலைமைக்கு புரட்சித் தலைவர் அரசு விட்டு விடாது.

அக்டோபர் வரை 4½ கோடி காலன் அளவில் சமாளிக்க முடியும். 1985-க்குள் தண்ணீர் வழங்குவதில் எந்தவித மான தட்டுப்பாடும்இருக்காது.

### 3222 குழாய் கிணறுகள் மூலம் தண்ணீர் சப்ளை

சென்னை நகரில் 3 ஆயிரத்து 222 குழாய் கிணறுகள் தோண்டப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து தண்ணீர் சப்ளை செய்யப்பட்டுள்ளது. ஆயிரத்து 116 கிணறுகள் மூலமும் நீர் வழங்கப்படுகிறது. 285 இரும்புத் தொட்டிகள் மற்றும் 125 சிமெண்ட் தொட்டிகளில் நீர் நிரப்பப்பட்டு வழங்கப்படுகிறது. 48 லாரிகளில் நீர் வழங்கப்பட்டு வருகிறது.

நீர் வழங்குவதை கவனிக்கவும் தட்டுப்பாடு ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவும் ஒரு புதிய கண்காணிப்பு பொறியாளரை 3 மாத காலத்துக்கு நியமித்திருக்கிறோம். தட்டுப்பாடு எந்தப் பகுதியில் இருந்தாலும்அவருடன் தொடர்பு கொள்ளுமாறு பொதுமக்கள் கோரப்படுகிறார்கள். அவருடைய அலுவலக போன் நெம்பர்—83557. இருப்பிடத்தின் தொலைபேசி எண் 613136.

யாலவாக்கம் பகுதியில் சில தனியார் லாரிகளில் தண்ணீர் கொண்டு வந்து அடையாறு, சைதாப்பேட்டை மற்றும் சில பகுதிகளில் விற்று வருகிறார்கள். இதைப் பொதுமக்கள் உன்னிப்பாய் கவனித்து அதிகாரிகளுக்கு புகார் அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறேன். ஏனென்றால் குடிநீர் வாரியத்தினர்தான் இப்படி தண்ணீரை லாரிகளில் கொண்டுவந்து வற்பனை செய்கிறார்கள் என்று எண்ணத் தோன்றும். அப்படி தண்ணீர் கிடைக்கும் பகுதிகளில் குடிநீர் வாரியமே தண்ணீரைக் கொண்டு வந்து இலவசமாக பொது மக்களுக்கு வழங்க முடியும்.

கொடுங்கையூர், எருக்கஞ்சேரி பகுதிகளைச் சேர்ந்த சில பெண்கள் வாரியத்தின் எதிரில் பானைகளை உடைத்ததாகச் சொன்னார்கள்.

இந்தப் பகுதிகளில் குடிநீர் சப்ளைசெய்யப்பட்டு வருகிறது. இந்த 2 பகுதிகளும் சென்னை நகரில் புதியதாக சேர்க்கப்பட்ட பஞ்சாயத்துக்கள் ஆகும்.

இவர்கள் பானைகளை உடைக்க வேண்டிய இடம் கருணாநிதியின் வீடுதான். 20 ஆண்டுகளாக ஆட்சிப் பொறுப்பில் இருந்த பக்தவத்சலமோ கடந்த 7 ஆண்டுகளாக இருந்த கருணாநிதியோ சென்னை குடிநீரின் பிரச்னையை தீர்க்க நடவடிக்கை எடுக்கவில்லை. நிரந்தரமான திட்டம் ஒன்றையும் அவர்கள் மேற்கொள்ளவில்லை.

திருவான்மியூர் பகுதிகளில் தண்ணீர் நிறைய கிடைக்கிறது. அங்கே "பம்பிங்" ஆரம்பித்து 3 மாதம் ஆகிறது. கிடைக்கும் நீரை தெருக்குழாய் மூலம் மக்களுக்கு வினியோகம் செய்கிறோம். அதிகப்படி நீரை தரமணி, இந்திராநகர், சாஸ்திரி நகர், பகுதிகளுக்கு சப்ளை செய்கிறோம்.

கிருஷ்ணா நதியில் இருந்து தண்ணீர் கொண்டுவர முயற்சி செய்து வருகிறோம். அதே நேரத்தில் குடிநீர் தட்டுப்பாடு ஏற்படாமல் இருக்க பல்வேறு முயற்சிகளையும் எடுத்து வருகிறோம்.

அரசாங்க. வீட்டுவசதி வாரிய வீடுகளில் குடியிருக்கும் அரசு ஊழியர்கள் வேறு ஊருக்கு மாற்றப் படுவார்களேயானால் அவர்கள் தற்போது இருக்கும் வீடுகளில் கல்வி ஆண்டு முடிய இருக்கலாம் என்ற வசதி செய்யப்பட்டுள்ளது.

மே மாதம் முதல் ஜூலை மாதம் இறுதி வரையிலும் இருக்கலாம். அதற்கு மேற்பட்டால் 3 மாத காலம் அவகாசமும் கொடுக்கப்பட்டு இருக்கிறது. ஆண்டுமத்தியில் மாற்றல் வந்தாலும் கவலைப்படத் தேவையில்லை.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.

தஞ்சை மாவட்டத்தில்

## 4.25 லட்சம் ஏக்கரில் குறுவை சாகுபடி செய்ய ஏற்பாடு

**தஞ்சை, ஜூலை 4 தஞ்சை மாவட்டத்தில் இந்த ஆண்டு 4 லட்சத்து 25 ஆயிரம் ஏக்கரில் குறுவை சாகுபடி செய்ய ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.**

குறுவை சாகுபடிக்காக 6ஆயிரம் ஏக்கரில்குறுவை நாற்றங்காலில் விதைக்கப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்டத்தில் குறுவை சாகுபடி தீவிரமாக நடந்து வருகிறது.

கடந்த மாதம் 21ம் தேதி மேட்டூர்அணையில் இருந்து தண்ணீர் விடப்பட்டுள்ளது.

தஞ்சை மாவட்டம் முழுமையும் ஆறுகளில் தண்ணீர் வந்து விட்டதால் குறுவை சாகுபடியில் விவசாயிகள் தீவிரமாக ஈடுபட்டு விட்டனர்.

குறுவை நாற்றுக்காக 6 ஆயிரம் ஏக்கர்களில் குறுவை விதைக்கப்பட்டுள்ளது.

600 டன் குறுவை நெல் விதை இதற்காகப் பயன்படுத்தப் பட்டுள்ளது.

இந்த ஆண்டு தஞ்சை மாவட்டத்தில் மட்டும் 4 லட்சத்து 25 ஆயிரம் ஏக்கரில் குறுவை சாகுபடி நடைபெறும்.

மேட்டூர் அணையிலிருந்து பாசனத்திற்காக தினமும் 15 ஆயிரம் கன அடி தண்ணீர் விடப்பட்டு வருகிறது.

## பெண்ணிடம் நகை திருட்டு: ஆசாமி கைது

சென்னை, ஜூலை 4- அய்யப்பன் கோவிலுக்குச் சென்ற பெண்ணிடமிருந்து ஒன்றரை சவரன் தங்கச் சங்கிலியை அறுத்துக்கொண்டு ஓடிய வாலிபர் ஒருவரைப் போலீசார் கைது செய்துள்ளனர்.

சென்னை சூளைமேட்டைச் சேர்ந்தவர் கணேசன் (வயது 29). இவர் சம்பவத்தன்று மகாலிங்கபுரத்திலுள்ள அய்யப்பன் கோவிலுக்கு வந்த கமலாம்பாள் என்ற பெண்ணின் கழுத்திலிருந்த 1½ சவரன் நகையை அறுத்துக் கொண்டு ஓடி விட்டார்.

இதுகுறித்து கமலாம்பாள் நுங்கம்பாக்கம் காவல் நிலையத்தில் புகார் செய்தார். உதவி கமிஷனர் ராஜன் உத்திரவின் பேரில் இன்ஸ்பெக்டர் நாகராஜன் வழக்குப் பதிவு செய்து சூளைமேட்டைச் சேர்ந்த கணேசனை கைது செய்தார் விசாரணையில் இவரிடமிருந்து 10, ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள தங்க நகைகள் கைப்பற்றப்பட்டன. மேலும் இவர் ஏற்கெனவே இதே குற்றத்திற்காக 7 முறை சிறை சென்றவர் என்று தெரிய வந்தது. இன்ஸ்பெக்டர் நாகராஜன் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகிறார்.

## ஆலடி அருணா நிகழ்ச்சிகள்

ஜூலை 5-பேரையூர்
6-சோழவந்தான்
7-போடி
8-தேனி
10-ஏரல்
12-குரும்பூர்
13-குளித்தலை
14-மணப்பாறை
19-திசையன்விளை

இந்தியா வந்த முதல் கிறிஸ்தவ

## பாதிரியார் சீஜன்பார்க் பிறந்தநாள் விழா

தரங்கம்பாடி, ஜூலை 4— வெளிநாட்டிலிருந்து முதன் முதலாக தரங்கம்பாடி வந்த கிறிஸ்தவ பாதிரி பர்த்தாலமேயு சீஜன்பார்க்கின் பிறந்த நாள் விழா நேற்று தரங்கம்பாடியில் கொண்டாடப்பட்டது.

சுமார் 275 ஆண்டுகளுக்கு முன்பு அவர் தரங்கம்பாடிக்கு வந்து சேர்ந்தார்.

தரங்கம்பாடியில் முதன் முதலாக ஒரு அச்சகத்தை நிறுவினார். பின்னர் பொறையாரில் கையால் செய்யப்படும் காகித ஆலை ஒன்றையும் அவர் ஏற்படுத்தினார். பைபிளை அவர் தமிழில் மொழிபெயர்த்து, ஜெர்மன் மொழியில் தமிழ் இலக்கணத்தையும்இயற்றினார்.

நேற்று கொண்டாடப்பட்ட அவரது 300-வது பிறந்தநாள் விழாவில் பல்வேறு கிறிஸ்தவ சபைகளைச் சேர்ந்தவர்களும் கலந்துகொண்டனர்.

துணி வியாபாரிகள் சங்க வைர விழா:

## டாக்டர் நாவலர் தொடங்கி வைக்கிறார்

சென்னை, ஜூலை 4- சென்னை துணி வியாபாரிகள் சங்கத்தின் வைர விழா இம்மாதம் 6ந்தேதி ஆபட்ஸ்பரியில் நடக்கிறது. நிதியமைச்சர் நாவலர் கலந்துகொண்டு விழாவினைத் துவக்கி வைக்கிறார். விழாவில் இந்திய பருத்தி ஆலைகள் அமைப்பின் தலைவர் கே. ராஜகோபாலும் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகிறார்.

கேரள மாநிலத்தில்

## இ.காங்கிரசுடன் அந்தோணிகாங்கிரஸ் இணைகிறது

**புதுடெல்லி, ஜூலை 4- கேரளத்தில் அந்தோணி தலைமையில் உள்ள காங்கிரஸ் கட்சி எந்த நேரமும் இந்திரா காங்கிரஸ் கட்சியுடன் இணையும் என்று கேரள முதல்வர் கருணாகரன் கூறினார்.**

கருணாகரன் டெல்லிக்கு வந்து பிரதமர் இந்திராவைச் சந்தித்து கேரள அரசியல் நிலவரம் பற்றிப் பேசினார்.

நிருபர்களிடம் பேசுகையில் அந்தோணி கூறியதாவது:—

தமது கட்சியை இந்திரா காங்கிரஸ் கட்சியுடன் இணைக்க ஏற்கனவே அந்தோணி ஒப்புக்கொண்டு விட்டார். இந்த இணைப்பு என்பது காலப்போக்கில் நடைபெறட்டும் என்றும் கூறினார். இப்போது எந்த நேரத்திலும் அந்தோணி காங்கிரஸ் இந்திரா காங்கிரஸ் கட்சியுடன் இணையும்.

கேரளத்தில் இன்னும் பல்வேறு காங்கிரஸ் குழுக்கள் இருக்கின்றன. பிரதமரின் 20 அம்சத் திட்டத்தை ஏற்றுக் கொள்கிற எந்தக் குழுவும் இந்திரா காங்கிரசுடன் இணையலாம்.

ஜோசப் தலைமையில் உள்ள காங்கிரஸ் கட்சி கேரளக்கூட்டணி அரசிலிருந்து வெளியேறும்என்று வந்துள்ள செய்திக்கு ஆதாரம் இல்லை. கூட்டணி அரசிலிருந்து வெளியேற வேண்டும் என்று அவர்கள் சிந்தித்துக் கூடப் பார்த்ததில்லை.

இவ்வாறு கேரள முதல்வர் கருணாகரன் கூறினர்.

## அரியானாவில் 2எம்.எல்.ஏக்கள் கட்சி தாவல்

சண்டிகார், ஜூலை 4- அரியானாவில் 2 லோக்தள எம்.எல்.ஏக்கள் இ. காங்கிரசில் சேர்ந்தனர். அவர்கள் பெயர் கிரிராஜ்கிஷோர், திலுராம்.

90 உறுப்பினர்களைக் கொண்ட அரியானா சட்ட சபையில் இ. காங்கிரசின் பலம் தற்போது 51ஆக உயர்ந்துள்ளது.

## ரூ. 2 கோடி பேரம்: கர்நாடக மந்திரி மீது எதிர்க்கட்சி புகார்

**பெங்களூர், ஜூலை 4- உயர்நீதி மன்ற தடை உத்தரவை அகற்றச் செய்ய கர்நாடக அரசு நடவடிக்கை எடுக்காமல் இருப்பது என்றும், அதற்காக என்ஜினீயரிங் கல்லூரிகளின் நிர்வாகத்தினர் 2 கோடி ரூபாய் இந்திரா காங்கிரசுக்கு தருவது என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டதாகவும் இந்தப் பணத்தை இந்திரா காங்கிரஸ் கட்சி வசூலிததது என்றும் கர்நாடக சட்டசபையில் எதிர்க்கட்சி உறுப்பினா பொம்மை புகார் கூறினார்,**

கர்நாடக மாநிலத்தில் தனியார் என்ஜினியரிங் கல்லூரிகளில் சேர்த்துக் கொள்ளப்படும் மாணவர்கள் ஒவ்வொருவரும் ஒரு பெரிய தொகையை தலை வீதக் கட்டணமாக செலுத்த வேண்டும் என்ற ஏற்பாட்டை படிப்படியாக ஒழிக்க வகை செய்யும் ஒரு உத்தரவை கர்நாடக அரசு பிறப்பித்துள்ளது.

இந்த உத்தரவுக்கு கர்நாடக உயர்நீதிமன்றம் இடைக்கால தடை உத்தரவை விதித்திருக்கிறது.

உயர்நீதி மன்றத்தின் இடைக்கால தடை உத்தரவை அகற்றச்செய்வதற்காக நடவடிக்கை எடுக்காமல் இருப்பதற்கு கர்நாடக அரசு தனியார் என்ஜினியரிங் கல்லூரிகளின் நிர்வாகங்களுடன் ஒரு பேரம் செய்து கொண்டுள்ளது என்று நேற்று கர்நாடக சட்டசபையில் எதிர்க் கட்சி உறுப்பினர் எஸ். ஆர். பொம்மை (ஐக்கிய ஜனநாயக முன்னணி) புகார் கூறினார்.

என்ஜினியரிங் மற்றும் இதர தொழில் நுட்ப படிப்புகளுக்கு மாணவர்களை சேர்க்கும் கொள்கை பற்றிய ஒரு கவன ஈர்ப்பு பிரேரணை மீதுபொம்மை பேசினார்.

அவர் பேசுகையில் கூறியதாவது:—

கர்நாடகத்தில் நடைபெற இருக்கும் சட்டசபைத் தேர்தலுக்காக இந்திராகாங்கிரஸ் கட்சி இந்த பேரத்தை நடத்தியிருக்கிறது.

கல்வியமைச்சர் ஜி.பி. சங்கரராவும், தனியார் என்ஜினியரிங் கல்லூரிகளின் நிர்வாகத்தினரும் சமீபத்தில் சந்தித்துப் பேசியபோது இந்தபேரம் ஏற்பட்டது.

உயர்நீதி மன்ற தடை உத்தரவை அகற்றச் செய்ய கர்நாடக அரசு நடவடிக்கை எடுக்காமல் இருப்பது என்றும் அதற்காக என்ஜினியரிங் கல்லூரிகளின் நிர்வாகத்தினர் ரூ. 2 கோடி இந்திரா காங்கிரஸ் கட்சிக்குத் தருவது என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. இந்திரா காங்கிரஸ் இந்த பணத்தை வசூலித்தது.

கல்லூரிகளில் கூடுதல் இடங்களை ஏற்படுத்த அனுமதி வழங்குவதற்கும் இதுபோல் ஒரு பணபேரம் நடந்துள்ளது. வாய்ப்புக் கொடுத்தால் இந்த புகார்களை நிரூபிக்கிறேன்.

இவ்வாறு பொம்மை கூறினார்.

கல்வி அமைச்சர் சங்கரராவ் இந்தபுகாரை மறுத்தார்.

## நிலச்சரிவு, வெள்ள அபாயத்தைத் தடுக்க நீலகிரியில் 'வயர்லெஸ்' எச்சரிக்கைநிலையம்

உதகமண்டலம், ஜூலை 4— நீலகிரி மாவட்டத்தில் நிலச்சரிவு, வெள்ள அபாயம் ஏற்படுவதைத் தடுக்க தமிழக அரசு "வயர்லெஸ்" எச்சரிக்கை நிலையங்களை 7 முக்கிய இடங்களில் அமைக்கவிருக்கிறது.

நீலகிரிமாவட்டபோலீஸ் தலைமை அதிகாரி எஸ். ரமணி நேற்று உதகமண்டலத்தில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

கலப்படம் செய்வோர், கள்ளமார்க்கெட்காரர்கள் எடை குறைப்பு செய்து பொதுமக்களை ஏய்ப்பவர் ஆகியோர் மீது போலீசார் கடும் நடவடிக்கை எடுத்து வருகிறார்கள்.

கலப்படம், கள்ளமார்க்கெட்காரர்களை பிடித்துக்கொடுப்பவர்கள் அதுபற்றி தகவல்கொடுப்பவர்களுக்கு 500 ரூபாய் பரிசளிக்கப்படும்.

நீலகிரி மாவட்டத்தில் வெள்ள அபாயம் ஏற்படாமலும், நிலச்சரிவுகள் ஏற்படாமலும் இருக்க பல்வேறு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. எந்த இடத்திலாவது நிலச்சரிவோ அல்லது வெள்ள அபாயமோ ஏற்பட்டவுடன் அதுபற்றி தகவல் அளிக்க 7 முக்கிய இடங்களில் "வயர்லஸ்" (ரேடியோ) கருவிகள் பொருத்தப்பட்ட எச்சரிக்கை நிலையங்கள் அமைக்கப்படவிருக்கின்றன.

அண்மையில் இந்த மாவட்டத்தில் போலீசார் திடீர் சோதனை நடத்தி கள்ளச்சாராயம் காய்ச்சுவோர் மீது கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டனர். சுமார் 10 ஆயிரம் ரூபாய் பெறுமானம் உள்ள சாராயத்தையும் அவர்கள் கைப்பற்றினார்கள். 7 ஆயிரம் லிட்டர் ஊறலையும் அவர்கள் அழித்தனர். இது தொடர்பாக 64 பேர்கள் கைது செய்யப்பட்டனர்.

இவ்வாறு மாவட்ட போலீஸ் சூப்பிரெண்ட் கூறினார்.

## திண்டுக்கல் ஒன்றியத்தில் சத்துணவு திட்ட துவக்க விழா

திண்டுக்கல், ஜூலை 4— திண்டுக்கல் ஒன்றியத்தில் சத்துணவு திட்ட துவக்க விழா தாடிக்கொம்பில் நடை பெற்றது.

சட்டமன்ற உறுப்பினர் வரதராசன் தலைமையில் ஆத்தூர் சட்டமன்ற உறுப்பினர் ஆ. வெள்ளைச்சாமி, தமிழ்நாடு அரசு குழாய்க்கிணறு வாரிய இயக்குனர் திண்டுக்கல் சீனிவாசன், திண்டுக்கல் ஒன்றிய செயலாளர் வி. கோபால கிருஷ்ணன், ரெட்டியார் சத்திரம் பி. கே. சண்முகம், அய்யம்பாளையம் குமரேசன், வட்டாட்சித் தலைவர் ஜனார்த்தனன், கோட்ட வளர்ச்சி அலுவலர் லிங்கவன், ஆணையாளர் முனியாண்டி, வழக்கறிஞர் பிரேம்குமார், மு. அப்துல்பாரி, செல்வம், ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள்.

குழந்தைகளுக்கு சத்துணவு பரிமாறப்பட்டது. அலெக்சாண்டர் நன்றி கூறினார்.

என். சி. சி. யில்

## தமிழக மாணவி சிறந்த "கேடட்" ஆகத் தேர்வு

குவாலியர், ஜூலை 4- தேசிய மாணவர் படையின் அகில இந்திய அணிவகுப்பு நடந்தது. ஒவ்வொரு மாநிலத்திலும் சிறந்த மாணவிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்த அணிவகுப்பு நடத்தப்பட்டது.

சிறந்த கேடட்டாக சீனியர் பிரிவில் தமிழக மாணவி எஸ். கமலா தேர்ந்தெடுக்கப்பட்டார். கமலா தமிழகத்தைச் சேர்ந்த மாணவி ஆவார்.

ஜூனியர் பிரிவில் மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த சந்திரபிரபா தேர்ந்தெடுக்கப்பட்டார். இருவருக்கும் டைரக்டர் ஜெனரலின் "பிரம்பு" பரிசளிக்கப்பட்டது.

சென்ற ஆண்டில்

## ஜப்பானில் 20 ஆயிரம் பேர் தற்கொலை

டோக்கியோ, ஜூலை 4— கடந்த ஆண்டில் மட்டும் ஜப்பான் நாட்டில் 20 ஆயிரத்து 434 பேர் தற்கொலை செய்து கொண்டனர். இவர்களில் 7 ஆயிரத்து 492 பேர் பெண்கள்.

கடந்த 1980 ஆம் ஆண்டில் நடந்த தற்கொலைகளை விட சென்ற ஆண்டு எண்ணிக்கை 614 குறைந்துள்ளது.

தற்கொலையால் மாண்ட மொத்த எண்ணிக்கையில் 5 ஆயிரத்து 985 பேர் 60 வயதுக்கும் மேற்பட்ட முதியோர். தங்களது வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டதால் இந்த முதியோர் தற்கொலை செய்துகொண்டனர் என்று தெரிகிறது. 40 வயதுக்கு உட்பட்டவர்கள் மட்டும் சுமார் நாலு ஆயிரம் பேர் தற்கொலை செய்து கொண்டு உள்ளனர். தற்கொலை செய்து கொண்ட 19 வயதுக்குட்பட்ட இளைஞர்களின் எண்ணிக்கை 610.

'நோய்வாய்ப்பட்டு சுகம் அடையாமல் கஷ்டப்பட்டவர்கள் தங்களை மாய்த்துக் கொண்டனர் என்றும் இவர்களின் எண்ணிக்கை மொத்த தற்கொலை எண்ணிக்கையில் 77 சதவிகிதம் என்றும் கணக்கிடப்பட்டுள்ளது.





சைதை தொகுதி 144 வது வட்டத்தின் சார்பில் மாநகராட்சி தேர்தல் நிதி 2500 ரூபாயை டாக்டர் நாவலரிடம் சைதை துரைசாமி வழங்கினார். மதுசூதனன் நடராசன், யாதவராமன், இக்பால், செல்வராஜ், பழனி ஆகியோர் உடனிருக்கின்றனர்.

டாக்டர் ரெக்ஸ் அறிக்கை

# காசநோயிலிருந்து குழந்தைகளைகாக்கும் இலவசஉணவுதிட்டம்

**சென்னை, ஜூலை 4- முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கியுள்ள குழந்தைகளுக்கான இலவச சத்துணவுத் திட்டம் தமிழகத்தில் காச நோய் என்னும் கொடிய வியாதியை இன்னும் சில ஆண்டுகளில் துரத்தி அடித்து விடும் என்று சென்னை நகர முன்னாள் செரீப் டாக்டர் ரெக்ஸ் கூறியுள்ளார்.**

தமிழகத்தில் உள்ள ஏழை எளிய குழந்தைகள் அனைத்தும் சத்துணவு பெற்று வளம் பெற முதல்வர் புரட்சித்தலைவர் இலவச சத்துணவு திட்டத்தை துவக்கியுள்ளார்.

இத்திட்டம் பற்றி பிரபல மருத்துவ நிபுணரும் முன்னாள் சென்னை நகர செரீப்புமான டாக்டர் ரெக்ஸ் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—



இந்திய நாட்டில் 3 சதவிகித மக்கள் காசநோயால் பீடிக்கப்பட்டுள்ளனர். பெரும்பாலும் 2 வயது முதல் 14 வயதுக்குட்பட்ட சின்னஞ் சிறுசுகளே இந்தக்கொடிய நோயால் பாதிக்கப்படுகிறார்கள் என்று மருத்துவபுள்ளி விவரங்கள் கூறுகின்றன.

இந்தியாவில் ஆண்டுதோறும் ஒரு லட்சம் குழந்தைகள் காசநோயால் இறக்கின்றன என்றும் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன.

இப்படி சின்னஞ்சிறுவர்களை காசநோய் பீடிப்பதற்கு அடிப்படைக் காரணம் அந்தக் குழந்தைகளுக்கு சத்துணவு இல்லாமைதான்.

இந்த நிலையில் தமிழக முதல்வர் 14 வயதுக்குட்பட்ட குழந்தைகள் அனைவருக்கும் ஆண்டுதோறும் ஒவ்வொரு நாளும் பகல் உணவை சத்துணவாக வழங்கும் திட்டத்தை துவங்கியுள்ளார். இந்தத் திட்டம் பசிப்பிணியைப் போக்கும் திட்டம் என்ற அளவில் மட்டும் அல்லாது தமிழகத்தில் இன்னும் சில ஆண்டுகளில் காசநோயை குழந்தைகளிடம் இருந்து விரட்டி அடிக்கும் திட்டமும் ஆகும். தொலை நோக்கோடு மருத்துவ சிந்தனையுடன் பார்ப்போமானால் இந்த உண்மை நன்றாக விளங்கும்.

### ஒற்றுமைக்கு வழிகோலும்

தமிழகத்தில் காசநோய் என்னும் கொடிய நோயை விரட்டியடிப்பதற்கு இந்த இலவச சத்துணவுதிட்டம் ஒரு கால்கோள் விழா என்றே சொல்லவேண்டும்.

தவிர நூற்றுக்கணக்கான குழந்தைகள் ஜாதிவித்தியாசம் பாராமல் மத பேதங்களை மறந்து ஒரே பந்தியில் அமர்ந்து உணவு கொள்வது தமிழகத்தின் வளர்ச்சிக்கும், ஒற்றுமைக்கும் வழிகோலும் ஒரு சீரிய திட்டமாகும்.

இத்திட்டத்தை நல்ல முறையில் செயல்படுத்தும் முதல்வரை அனைவரும் பாராட்ட கடமைப்பட்டுள்ளோம்.

இவ்வாறு டாக்டர் ரெக்ஸ் குறிப்பிட்டுள்ளார்.



சென்னையை அடுத்த வில்லிவாக்கத்தில் இலவச உணவுத் திட்டத்தை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் துவக்கிவைத்தார். மாவட்ட கலெக்டர் ராமச்சந்திரன், ஜே.சி.டி. பிரபாகரன் எம்.எல்.ஏ ஆகியோர் விழாவில் பங்கேற்றனர்.

# எஸ். டி. எஸ். பேச்சு...

(1 ம் பக்கத் தொடர்ச்சி)

என்று சொல்வது பொருத்தமாகும்.

### வரலாற்று நிகழ்ச்சி

எந்த அரசு வந்தாலும் இந்த திட்டத்தை நிறுத்த முடியாது. தீர்மானத்தை போடுவார்கள் சட்டத்தை கொண்டு வருவார்கள். வேறு ஒரு அரசு வரும். அதனை மாற்றி அமைக்கும். ஆனால் வருங்காலத்தில் எந்த அரசு வந்தாலும் இந்த திட்டத்தை மட்டும் மாற்றியமைக்க முடியாது. ஆகவே இது ஒரு வரலாற்று நிகழ்ச்சி என்று சொல்வதில் தவறு இல்லை.

இந்த வரலாற்று நிகழ்ச்சியை யாராலும் நிறுத்த முடியாத அளவுக்கு இத்திட்டத்தை வெற்றிகரமாக நடத்திக் கொடுக்க வேண்டுமென்று அரசு அதிகாரிகளையும், பொதுமக்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

இங்கே கொடுக்கப்படுகிற மதிய உணவு 2 விதமாக பிரித்துக் கொடுக்கப்படுகிறது. அதாவது 2 வயது முதல் 5 வயது குழந்தைகள் பதினேழரை லட்சம். 5 வயது முதல் 10 வயது குழந்தைகள் நாற்பத்து மூன்றரை லட்சம். மொத்தம் சுமாராக 60 லட்சம் குழந்தைகள்.

இந்த மாவட்டத்தைப் பொறுத்தவரை ஏறக்குறைய 3 லட்சம் குழந்தைகள் பயன்பெறுகிறார்கள். கிட்டத்தட்ட 20000 மையங்கள் ஏற்படுத்தப்பட்டு ஏழைக் குழந்தைகளுக்கு மதிய உணவு வழங்க ஏற்பாடு செய்யப்படுகிறது. ஆனால் முன்பும் இதேபோல் மதிய உணவு கொடுத்தார்கள்.

ஆனால் பள்ளி சென்று கல்வி பயின்ற மாணவ மாணவிகளுக்கு மட்டும் அதுவும் 5 வயதுக்கு மேலே உள்ள குழந்தைகளுக்கு உணவு கொடுத்தார்கள். 180 நாட்கள் மட்டும் அந்த உணவு கொடுக்கப்பட்டு வந்தது. அதுவும் குறிப்பிட்ட மாணவ மாணவிகளுக்கு மட்டுமே இந்த மதிய உணவு அளித்தார்கள்.

### புரட்சித் திட்டம்

ஆனால் புரட்சித் தலைவர் தந்த இந்தத் திட்டத்தில் பள்ளிக்கூடம் நடக்காத விடுமுறை நாட்களிலும் மாணவ, மாணவிகள் எல்லோருக்கும் 365 நாளும் மதிய உணவு வழங்கப்படுகிறது. வருடம் பூராவும் வழங்கப்படுவது இந்த திட்டத்தில் புதுமை என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இத்திட்டத்தில் குழந்தைகள் யாருக்கு வேண்டுமானாலும் உணவு உண்டு என்கிற திட்டம் ஒரு புரட்சிகரமான திட்டம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்.

# இரு பஸ்கள் நேருக்கு நேர் மோதல்-சாவு 15: 52 பேர் படுகாயம்

**சேலம், ஜூலை 4- சேலத்திற்கு 25 மைலுக்கு அப்பால் கள்ளிப் பேட்டையில் இரண்டு தனியார் பஸ்கள் நேருக்கு நேர் பயங்கரமாக மோதிக் கொண்டன. இந்த விபத்தில் 15 பேர் உயிரிழந்தனர். 52 பேர் காயமுற்றனர். விபத்தில் சிக்கி குற்றுயிரும் குலையுயிருமாக கிடந்த பலரை கா. கா. தே கா. தலைவர் குமரி அனந்தன் காப்பாற்றியதோடு விபத்து பற்றி உயர் அதிகாரிகட்கு தகவல் தெரிவித்தார்.**

பஸ் விபத்து பற்றிய விவரம் வருமாறு:

தர்மபுரி மாவட்டம் அரூரிலிருந்து சேலத்துக்கு எஸ் எம். டி. என்ற தனியார் பஸ் வந்து கொண்டிருந்தது. சேலத்திலிருந்து அரூருக்கு 'மல்லிகா பஸ் சர்வீஸ்' என்ற தனியார் பஸ் போய்க் கொண்டிருந்தது. இந்த இரண்டு பஸ்களும் சேலத்திலிருந்து 25 மைல் தூரத்தில் உள்ள கள்ளிப் பேட்டை என்ற இடத்தில் நேருக்குநேர் பயங்கரமாக மோதிக்கொண்டன.

இரண்டு பஸ்களிலும் உட்கார இடம் இல்லாது ஏராளமான பயணிகள் நின்றுகொண்டு பயணம் செய்து கொண்டிருந்தனர். எனவே இரண்டு பஸ்களும் பயங்கரமாக மோதியதில் பிரயாணிகள் பஸ்சுக்குள் உருண்டனர்.

### 9 வயது சிறுமி பலி

மோதிய வேகத்தில் பஸ்கள் இரண்டுமே கவிழ்ந்து விட்டதால் பலர் பஸ்களின் அடியில்

(8-ம் பத்தி பார்க்க)

கழக அரசின் சாதனை;

# ஒரே ஆண்டில் 3500 பள்ளிகள்: குழந்தைவேலு தகவல்

**சேலம், ஜூலை 4. வேறெந்த ஆட்சியும் செய்யாத நிலையில் தமிழகத்தில் நடப்பு ஆண்டில் 3 ஆயிரத்து 500 பள்ளிக்கட்டடங்களை கட்டி கழக அரசு பெரும் சாதனையைப் புரிந்துள்ளது என்று உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.**

சேலம் மாவட்டத்தில் உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார் இந்த நிகழ்ச்சிகளுக்கு சேலம் மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜன் தலைமை வகித்தார்.

சேலம்பெத்துநாய்க்கன் பாளையம் ஒன்றியம், தும்பல் கிராமத்தில் 63 ஆயிரத்து 526 ரூபாய் செலவில் கட்டப்பட்ட பள்ளிக்கட்டடத்தையும், ரூ. 84 ஆயிரம் செலவில் கட்டப்பட்டுள்ள தாய் சேய் நல விடுதியையும் அவர் திறந்து வைத்தார்.

அப்போது அவர் கூறியதாவது:—

தமிழகத்தில் இந்த ஆண்டு 3 ஆயிரத்து 500 பள்ளிக் கட்டடங்களை கழக அரசு கட்டியுள்ளது. வேறெந்த ஆட்சியும் செய்யாத நிலையில் கழக அரசு நடப்பு ஆண்டில் இந்தப் பள்ளிக்கட்டடங்களை ஏற்படுத்தி பெரும் சாதனையைப் புரிந்துள்ளது.

### தமிழக அரசின் நோக்கம்

ஏழ்மையைப் போக்குவதற்கும் அறியாமையை நீக்குவதற்கும் கழக அரசு பெரும் பாடுபட்டு வருகிறது. தமிழகத்தில் அனைத்து மக்களும் படித்தவர்களாக மாற வேண்டும் என்பதே இந்த அரசின் நோக்கம் இந்தத் திட்டம் வெற்றிபெறுவதற்கு தாய்மார்கள் ஒத்துழைப்புத் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தமிழகத்தில்உள்ளமலை வாழ் மக்களின் மேம்பாட்டுக்காக நடப்பாண்டில் ஒரு கோடியே 34 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

### உறைவிடப் பள்ளி திறப்பு

ஏற்காடு தொகுதிவெள்ளிக்கவுண்டன் புதூரில் 72 ஆயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ள ஆதிதிராவிட பழங்குடி மக்கள் உறைவிடப் பள்ளியை அமைச்சர் திறந்து வைத்தார்புழுதிக் கோட்டையில் இருந்து அறுநூத்துமலை வரை 12 கிலோ மீட்டர் சாலை ஒன்றை அமைக்க 84 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளதாகவும் அவர் தெரிவித்தார்.

சேலம் அயோத்தியாப் பட்டணத்தில் — பேரூர் சாலையில் வசிட்டநதியின் குறுக்கே ரூ. 15 லட்சம் செலவில் அமையும் பாலத்திற்கு அமைச்சர் அடிக்கல் நாட்டினார்.

மேட்டூர்

## அனல் மின் திட்டத்துக்கு மத்திய அரசு அனுமதி

மதுரை, ஜூலை 4— மேட்டூரில் 420 மெகாவாட் திறன் கொண்ட அனல்மின் நிலையம் அமைக்க மத்திய அரசு ஒப்புதல் அளித்துள்ளது என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

தூத்துக்குடியில் 500 மெகா வாட் மற்றும் 210 மெகா வாட் திறனுள்ள இரு பிரிவுகள், மற்றும் சென்னையில் 1050 மெகாவாட் திறனுள்ள அனல் மின் நிலைய திட்டங்களுக்கு விரைவில் அனுமதி கிடைக்கும் என எதிர் பார்க்கப்படுவதாகவும் அமைச்சர் பண்ருட்டி ராமசந்திரன் கூறினார்.

சேலத்தில்

காமராஜர் சிலை:

## அனைத்துக் கட்சிகளுடன் அரசு ஆலோசனை

சென்னை, ஜூலை 4— சேலத்தில் காமராஜர் சிலையை எங்கு வைப்பது என்பதுபற்றி ஆலோசிக்க சர்வகட்சிக் கூட்டத்தைத் தமிழக அரசு கூட்டியிருக்கிறது.

காலஞ்சென்ற விஜயராகவாச்சாரியாரின் சிலை அமைக்க சேலத்தில் ஒரு பீடம் அமைக்கப்பட்டது. அந்தப் பீடத்தில் காமராஜர் சிலையை சிலர் அமைத்துவிட்டனர்.

இதனால் பிரச்சினை எழுந்தது. இந்தப் பிரச்சினைக்கு சர்வ கட்சியினரின் ஆலோசனையைப் பெற தமிழக அரசு விரும்புகிறது.

விஜயராகவாச்சாரியாரும் நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டவர். காமராஜரும் நாட்டின் விடுதலைக்காக பாடுபட்டவர்.

எனவே சேலத்தில் காமராஜர் சிலையை எங்கு அமைப்பது என்பது பற்றி கருத்தறிய விரைவில் சர்வகட்சிக் கூட்டத்தைத் தமிழக அரசு கூட்டியிருக்கிறது.

ரூ. 8000

## கலர் டி. வி. செட்: மத்திய அரசு விலை நிர்ணயம்

புதுடெல்லி, ஜூலை 4. கலர்டெலிவிஷன் பெட்டிகளுக்கு மத்திய அரசு விலை நிர்ணயம் செய்துள்ளது.

சாதாரண முறையில் டியூன் செய்யும் கலர் டெலிவிஷன் பெட்டி ஒன்றின் விலை 7 ஆயிரத்து 500 ரூபாய் என்றும், எலெக்ட்ரானிக் முறையில் டியூன் செய்யும் டெலிவிஷன் பெட்டிகளின் விலை 8 ஆயிரம் ரூபாய் என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

இந்த விலை டெல்லியில் மட்டும் அமுலில் இருக்கும். மற்ற நகரங்களில் அந்தந்த மாநிலங்களுக்கேற்றபடி வரியுடன் சேர்த்து விற்பனை செய்யப்படும் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

(4-ம் பத்தி தொடர்ச்சி)

சிக்கிக் கொண்டனர். இந்த விபத்தில் 15 பேர் உயிரிழந்தனர். 52 பேர் காயமுற்றனர். விபத்தில் பலியானவர்களில் பத்து பேர் ஆண்கள். 9 வயது சிறுமி ஒருத்தியும் பலியானாள்.

தர்மபுரி மாவட்ட நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டுவிட்டு காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன் சேலம் திரும்பிக் கொண்டு இருந்தார். வழியில் இந்த பயங்கர விபத்தைக் கண்டதும் தான் வந்த காரை நிறுத்தி குற்றுயிருங்குலையுயிருமாய்க் கிடந்த 15 பேரை கிராமவாசிகள் சிலருடைய உதவியுடன் அந்த வழியாக வந்த 2 பஸ்களில் ஏற்றி சேலம் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தார்.

### குமரிஅனந்தன் உதவி

பஸ்களுக்கிடையில் சிக்கி மரணத்துடன் போராடிக் கொண்டிருந்த 5 பேரை குமரி அனந்தனும் மற்றும் சிலரும் காப்பாற்ற எவ்வளவோ முயற்சி செய்தும் முயற்சி பலன் அளிக்கவில்லை.

பஸ்சை துண்டு துண்டாக வெட்டியோ அல்லது கிரேன் மூலம் தூக்கினாலோ தான் அவர்களைமீட்கமுடியும் என்று உணர்ந்த குமரிஅனந்தன் உடனடியாக காரில் சேலத்துக்கு விரைந்து வந்து மாவட்ட ஆட்சித் தலைவர், போலீஸ், மருத்துவ அதிகாரிகள், தீயணைக்கும் படையினருக்கு தகவல் கொடுத்தார். உடனடியாக அதிகாரிகள் விபத்து நடந்த இடத்திற்கு சென்று வேண்டிய உதவிகளைப் புரிந்தனர்.

கீழ்க்கண்ட நீதிபதிகளின் முன்னிலையில் 3—7—82 அன்று மாடர்ன் லாட்ஜ், பாண்டிச்சேரியில் நடைபெற்ற 78-வது குலுக்கல் முடிவுகள்:-

நீதிபதிகள்:

1. திரு. கே. ராஜகோபாலன் உதவி புள்ளியியல் அலுவலர் இயக்குனர் பொருளாதாரம் மற்றும் புள்ளியியல் துறை பாண்டிச்சேரி
2. திரு. எஸ். சீத்தாராமன் இளநிலை கணக்கு அலுவலர், மின்துறை, பாண்டிச்சேரி
3. திரு. ஏ. அப்துல் சமது ரிட் பாரெஸ்ட் ரேஞ்ச் ஆபீசர், பாண்டிச்சேரி

வரிசைகள்:— பி.கி., பி.டி., பி.இ.,

டிக்கெட் எண்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| பி. கி. | 100000 | முதல் | 399999 | வரை |
| பி. டி. | 100000 | முதல் | 399999 | வரை |
| பி. இ. | 100000 | முதல் | 399999 | வரை |

முதல் பரிசு (1)
ரூ. 1,00,000 தலா
(எல்லாவரிசைக்கும்பொது)

பி. இ. 363478
(மதுரை)

ஆறுதல் பரிசு (2)
ரூ. 1,000 தலா
பி. கி. 363478
பி. டி. 363478

2-வது பரிசு (3)
ரூ. 10,000 தலா
பி. கி. 332993
(கோயம்புத்தூர்)
பி. டி. 108352
(மதுரை)
பி. இ. 378883
(வேலூர்)

3-வது பரிசு (90)
ரூ. 1,000 தலா

கீழ்க்கண்ட 5 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | |
|---|---|
| 10447 | 84254 |
| 65511 | 80428 |
| 90227 | 59052 |
| 96447 | 44538 |
| 51685 | 75303 |

4-வது பரிசு (900)
ரூ. 100 தலா

கீழ்க்கண்ட நான்கு இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசுஉண்டு.

| | | |
|---|---|---|
| 4515 | 2038 | 2618 |
| 4534 | 7026 | 9944 |
| 4068 | 8802 | 6891 |
| 4213 | | |

5வது பரிசு (1800)
ரூ. 50 தலா

கீழ்க்கண்ட 4 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 2156 | 1415 | 8490 |
| 2432 | 6358 | 5416 |
| 1538 | 0705 | 3515 |
| 7642 | 1095 | 8401 |
| 4753 | 2310 | 2529 |
| 8023 | 3399 | 3642 |
| 4623 | 7263 | |

6வது பரிசு (1800)
ரூ. 20 தலா

கீழ்க்கண்ட 4 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 1811 | 7162 | 6094 |
| 2813 | 5758 | 5161 |
| 1438 | 7459 | 4919 |
| 1870 | 0244 | 5326 |
| 6277 | 7254 | 6709 |
| 1947 | 9525 | 6876 |
| 1323 | 4880 | |

7வது பரிசு (4500)
ரூ. 10 தலா

கீழ்க்கண்ட 3 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

272 034 478 597 936

குறிப்பு:- 3,4,5,6,7வது பரிசு பெற்றவர்கள் அவர்கள் டிக்கெட்டுகள் வாங்கிய உள்ளூர் ஏஜெண்டுகளை அணுகி அவர்களிடமிருந்து கிளைம் பார்ம்களைப் பெற்று அவற்றை நிரப்பி ஏஜெண்டுகளிடம் இருந்து பரிசுத் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம். முதல் பரிசு மற்றும் இரண்டாவது பரிசு பெற்ற டிக்கெட்டை வைத்திருப்பவர்கள் முதல் வகுப்பு நீதிபதி அவர்களால் ஒப்புதல் செய்யப்பட்ட பாஸ்போர்ட் சைஸ் போட்டோவுடன் மெஸர்ஸ் டெக்கான் ஏஜென்சியின் சென்னை அலுவலகத்தில் நேரடித் தொடர்பு கொண்டு பெற்றுக்கொள்ளலாம். இருந்தபோதிலும் அவர்கள் பரிசுத் தொகையை ஒருதேசியமயமாக்கப்பட்ட வங்கி மூலம் பெற விரும்பினால் அவர்கள் ஏதாவது ஒரு உள்ளூர் ஏஜெண்டிடம் இருந்து கிளைம்பார்மை பெற்று அதனைப் பூர்த்தி செய்து பரிசுத் தொகையை கேட்கலாம்.

டிரஷரர்
சேரிடபிள்
எண்டோவ்மெண்ட்ஸ்
பாண்டிச்சேரி

சோல் ஏஜெண்ட்ஸ்:- மெஸர்ஸ் டெக்கான் ஏஜென்சி

தலைமை அலுவலகம்:-
242-1 திருவல்லிக்கேணி
நெடுஞ்சாலை
சென்னை—5
போன்: 845043

கிளை அலுவலகம்:-
59, இளங்கோ நகர்,
பாண்டிச்சேரி- 605001
போன்: 5272

எமது அடுத்த வாராந்திர குலுக்கல்: 10—7—82 (79-வதுகுலுக்கல்) வரிசைகள் பி.எப், பி.ஜி, பி.எச்.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road Madras-600 029.
Editor: E. PARASURAMAN

### ரூ. 100 கோடி இலவச சத்துணவு திட்டம்:

# பாரதி கண்ட கனவை நனவாக்கி காட்டியவர் முதல்வர் புரட்சிதலைவர்

## அமைச்சர் காளிமுத்து பெருமிதம்

மதுரை, ஜூலை 4- "தனி ஒருவனுக்கு உணவு இல்லை எனில் ஜெகத்தினை அழித்திடுவோம்" என்றும் "வெறும் சோற்றுக்கு வந்ததடா பஞ்சம்" என்றும் வறுமையின் கொடுமையை அகற்ற குரல் கொடுத்தவர் மகாகவி பாரதி. இன்றைக்கு பாரதி கண்ட கனவை நனவாக்கிக் காட்டியவர் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர்தான் என்று அமைச்சர் காளிமுத்து பெருமிதத்துடன் கூறி, மதுரை மாவட்டத்தில் இலவச சத்துணவுத் திட்டத்தை தொடங்கி வைத்தார்.

திருப்பரங்குன்றத்தில் இலவச சத்துணவு திட்ட துவக்க விழாவும், பாரதியார் நூற்றாண்டுநினைவு ஊராட்சி ஒன்றிய கூடுதல் பள்ளிக் கட்டிடத் திறப்பு விழாவும் நடைபெற்றது. மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் ஆளுடையா பிள்ளை விழாவிற்கு தலைமை தாங்கினார்.

வேளாண்மைத்துறை அமைச்சர் காளிமுத்து இலவச சத்துணவுத் திட்டத்தைத் தொடங்கி வைத்து 750 குழந்தைகளுக்கு உணவு வழங்கினார். பொங்கல், சாம்பார், கேரெட் பொறியல், அப்பளம், பாயசம் குழந்தைகளுக்கு வழங்கப்பட்டது. குழந்தைகளுக்கு அறுசுவை உணவை பரிமாறிய அமைச்சர் காளிமுத்து, பொங்கலையும், பாயசத்தையும் சுவைத்துப் பார்த்துவிட்டு, கல்யாணவிருந்தைவிட பிரமாதமாக இருக்கிறது என்றார்.

விழாவில் பேசிய அமைச்சர் காளிமுத்து கூறியதாவது:-

பாரதியார் எந்த கனவை கண்டாரோ அந்த கனவை நனவாக்க முடியும் என்பதை தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் செயலில் காட்டியிருக்கிறார். "தனிமனிதனுக்கு உணவு இல்லை எனில் ஜெகத்தினை அழித்திடுவோம் என்று பாடியவன் பாரதி. அது மட்டுமல்ல "வெறும் சோற்றுக்கு வந்ததடா பஞ்சம்" என்றும் வறுமையின் கொடுமையை அகற்ற குரல் கொடுத்தவன் பாரதி.

### மோட்சத்துக்கு வழி...

மனிதனுக்கு பசித்தவயிறுக்கு உணவுகிடைத்தால் தான் அடுத்த பிரச்னை குறித்து அவன் சிந்திக்க முடியும். விவேகானந்தர் கூட பசித்த வயிற்றுக்கு சோற்றுக்கு வழி காட்டாத மதம் எப்படிமோட்சத்துக்கு வழிகாட்ட முடியும் என்று கூறியிருக்கிறார்.

அண்ணல் காந்தியடிகள்கூட ஏழைகளுக்கு இறைவன்க் காட்சிதர வேண்டும் என்றால் உணவு வடிவில் வந்து காட்சி தரவேண்டும் என்று குறிப்பிட்டார். பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்களும் ஏழையின் சிரிப்பிலே இறைவனை காண்போம் என்று கூறினார்.

இந்த உலகம் பசிக்கும் மனிதர்களை உற்பத்தி செய்து கொண்டு தான் இருக்கிறது. பசிக்கும் வர்க்கம் தொடர்ந்து இருந்து கொண்டுதானிருக்கிறது என்ற வேதனை நிறைந்த உண்மையை சொல்லித்தான் தீரவேண்டும். அன்றைக்கு பாரதி பாடிய 'வெறும் சோற்றுக்கு வந்ததடா பஞ்சம்' என்ற நிலைமை இன்றைக்கும் நீடிப்பதைகாண்கிறோம.

### வளரும் தலைமுறை

அத்தனை மனிதர்களுக்கும்உணவுகொடுக்கமுடியவில்லை என்றாலும்— சமுதாய நிலை பக்குவப்படவில்லை — பொருளாதார நிலை உயரவில்லை என்றாலும், வளரும் தலைமுறை— எதிர்கால சந்ததியினர் ஆரோக்கியமாக வாழ தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் இத்திட்டத்தை செயல்படுத்துகிறார்.

ஆரம்பத்தில் இத்திட்டத்தை அறிவித்தபோது இது எப்படி சாத்தியமாகும்; இது வெறும் வாய்ப் பந்தல், கனவுக் காட்சி, கவைக்கு உதவாத திட்டம், நடைமுறைப்படுத்த முடியுமா என்றெல்லாம் பேசினார்கள்.

100 கோடி ரூபாய் திட்டம் என்றாலும் ரூபாய் 200 கோடி செலவானாலும் பரவாயில்லை என்று முதல்வர் புரட்சித் தலைவர் உறுதி அளித்தார். அதன்படி இந்தத் திட்டம் நாடு முழுவதும் நிறைவேற்றப்படுகிறது. இந்தத் திட்டத்தை குன்றிமணி அளவும் பாதித்துவிடாமல் செயல்படுத்த வேண்டும். இது அதிகாரிகளின் கையில் இருக்கிறது. இந்தத் திட்டம் மென்மேலும் வளர வசதிமிக்கவர்கள் ஒத்துழைப்பு தரவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

# சித்தன் பாராட்டு

இந்திரா காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் என். எஸ். வி. சித்தன் விழாவில்கலந்துகொண்டு பேசினார். அப்போது அவர் கூறியதாவது:—

தமிழக முதல்வர் இந்த திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார். நான் எதிர்க்கட்சியில் இருந்தாலும் இந்தத் திட்டத்தை ஆதரிப்பவன். இந்தத் திட்டம் நல்ல திட்டம். இதை வரவேற்கிறேன். 2 வயது குழந்தையை சாப்பாடு போடும் இடத்திற்குக் கொண்டுவர அரசே ஏற்பாடு செய்ய வேண்டும். ஏனெனில் கிராமங்களில் உள்ள தாய்மார்கள் வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள். வேலையை விட்டு வர முடியாது. எனவே இதற்குத் தனியாக அரசு ஏற்பாடு செய்ய வேண்டும்.

இவ்வாறு என். எஸ். வி. சித்தன் கூறினார்.

# ரூ. 15 லட்சம் கொள்ளை: 3 பேர் கைது

சென்னை, ஜூலை4— பெங்களூரில் பல இடங்களில் 6லட்ச ரூபாய்மதிப்புள்ள பல கார்களை திருடிய 3 ஆசாமிகளை போலீசார் மடக்கிப் பிடித்தனர். சென்னை நகரில் கார் திருட்டை தடுக்க கமிஷனர் ஸ்ரீபால்உத்திரவின்பேரில் துணை கமிஷனர் குருவையா உதவி கமிஷனர் ராமப்பன் மேற்பார்வையில் இன்ஸ்பெக்டர் அம்ஜத் ஜட்டி தலைமையில் ஒரு விசேஷ போலீஸ் படை அமைக்கப்பட்டது.

அண்ணாசாலையில் ஒரு காரில் சந்தேகிக்கும்படி சுற்றிக் கொண்டிருந்த 3 பேரை பிடித்து போலீசார் விசாரணை செய்தனர். விசாரணையில் அவர்கள் பழைய குற்றவாளிகள் என்றும், பெங்களூரில் பல இடங்களில் கார்களை திருடியதாகவும் தெரியவந்தது.

அவர்கள் கொடுத்த தகவலின்பேரில்சென்னையில் 6 அம்பாசிடர் கார்களையும், ஒருமோட்டார் சைக்கிளையும் போலீசார் கைப்பற்றினர்.

மேலும் இவர்கள் பெங்களூரில பல வீடுகளில் புகுந்துகொள்ளையடித்ததாகவும் விசாரணையில் தெரியவந்துள்ளது.

இவர்கள் கொள்ளையடித்துள்ள சாமான்களின் மொத்த மதிப்பு ரூ. 15 லட்சம் ஆகும். இதுவரை சென்னை போலீசார் 6 லட்சப் ரூபாய் மதிப்புள்ள கார்களைப் பறிமுதல் செய்துள்ளனர். மேலும்புலன் விசாரணை நடந்து வருகிறது.

இதுகுறித்து சென்னை நகர போலீசார் பெங்களூர் போலீசாருக்கு தகவல்கொடுத்துள்ளனர்.

### கழக அரசுக்கு துணைவேந்தர் மாணிக்கம் பாராட்டு

மதுரை, ஜூலை 4— நிர்வாகத்தில் தலையிடாமல், தேவைப்படும் எல்லா வித உதவிகளையும் தமிழக அரசு செய்து கொடுத்தது என்று மதுரை காமராஜ் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவியிலிருந்து விலகிச் செல்லும்டாக்டர் வ. சுப. மாணிக்கம் பாராட்டு தெரிவித்துள்ளார்.

இந்தப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக கடந்த 1979 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 17 ம் தேதி டாக்டர் மாணிக்கம் பொறுப்பேற்றார். அவரது 3 ஆண்டுகால பதவி அடுத்த மாதத்தோடு முடிவடைகிறது. ஆனால் அதற்கு முன்னதாக ஜூலை முதல் தேதியில் இருந்தே தாம் விலகிச் செல்வதாகதனது ராஜினாமா கடிதத்தையும் ஆளுநர் சாதிக் அலிக்கு அவர் அனுப்பியிருந்தார்.

அவரதுராஜினாமாவை ஆளுநர் ஏற்றுக் கொண்டார்,

### தடுப்புக்காவல் சட்டங்கள்:

# சென்னை நகரில் கிரிமினல் குற்றங்கள் பெருமளவில் குறைவு

சென்னை, ஜூலை 4. தடுப்புக்காவல் சட்டப்படி தீவிர நடவடிக்கைகளை போலீசார் மேற்கொண்டதைத் தொடர்ந்து சென்னை நகரில் கிரிமினல் குற்றங்கள் பெருமளவில் குறைந்துவருகின்றன என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

கள்ளச்சாராயம்காய்ச்சுபவர்கள் போதைப் பொருள் விற்பனை செய்வோர், நிலத்தை ஆக்ரமிக்கும் குண்டர்கள், விபச்சாரம் நடத்துவோர் ஆகியோரை கைது செய்ய வகை செய்யும் தமிழ்நாடு தடுப்புக்காவல் சட்டத்தை கழக அரசு அமுல்படுத்தியது தெரிந்ததே.

மற்றும் தேசிய பாதுகாப்புச் சட்டப்படியும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

இந்த தடுப்புக்காவல் சட்டப்படி குற்றவாளிகளைஉடனடியாக கைது செய்து போலீசார் தீவிர நடவடிக்கைகள் மேற்கொண்டு வருகிறார்கள்.

போலீசாரின் தீவிர நடவடிக்கைகளைத் தொடர்ந்து சென்னை நகரில் கிரிமினல் குற்றங்கள் பெரும் அளவில் குறைந்து வருகின்றன.

சொத்துக்கள் கொள்ளை அடிப்பது கடந்த 6 மாத காலத்தில் அதிக அளவில் குறைந்துள்ளது. தமிழ்நாடு தடுப்புக் காவல் சட்டப்படி 25 பேர்கள் தான் கைது செய்யப்பட்டுள்ளனர்.

தேசிய பாதுகாப்புச் சட்டப்படி 21 பேர் கைது செய்யப்பட்டனர்.

ஜேப்படி, கொள்ளை, சொத்துக்களை திருடுவது ஆகிய குற்றங்களும் குறைந்துவிட்டன.

அண்மையில் பிரபல ஜேப்படி திருடன் வேளாங்கண்ணி என்பவன் தமிழ்நாடு தடுப்புக்காவல் சட்டப்படி கைது செய்யப்பட்டு ஒருவருடம் சிறைத் தண்டனை கொடுக்கப் பட்டான்.

சென்னைநகர போலீஸ் அதிகாரி ஒருவர் இத்தகவல்களைத் தெரிவித்தார்.

# கர்ப்பிணிப் பெண்கள் காப்பி குடிக்கலாமா?

பெங்களூர், ஜூலை 4- கர்ப்பிணிப் பெண்கள் காப்பி குடிக்கலாமா என்பது பற்றி போஸ்டன் பல்கலைக்கழகம் ஆராய்ச்சி ஒன்றை நடத்தியிருக்கிறது.

கர்ப்பிணிப் பெண்கள் அதிக அளவு காப்பி குடித்தால் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் ஊனமாகப் பிறக்கும் என்ற கருத்தை ஏற்கனவே அமெரிக்க உணவு மற்றும் மருந்து நிர்வாகத் துறை தெரிவித்திருந்தது.

இந்தக் கருத்து தவறானது என்று பல்கலைக்கழக ஆராய்ச்சி தெரிவித்திருக்கிறது.